உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

புள்ளிருக்கு வேளூர் என்கிற

வேதபுரி

# முத்துக்குமாரசுவாமி பேரில்

பாடிய

# கந்தபுராணசதகம்.

இஃது

மாயூரம் விசுவபிர்மவம்ச வைதீக குருஸ்தானம்

பிர்மஸ்ரீ சபாபதி ஆசாரியாரவர்கள் குமாரர்

அஷ்டாவதானம்

சந்திரசேகர உபாத்தியாயரென்று வழங்குகிற

முத்துக்குமார தாசரால்

இயற்றியதை

காட்டுமன்னார்கோவிலுக்கடுத்த

ராஜேந்திரசோழகனென்று வழங்குகிற

தெக்ஷணஸ்தானம்

ப. பச்சயப்பிள்ளை குமாரரும்

விருத்தாஜலம் போர்டு ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதருமாகிய

**மாணிக்கம்பிள்ளையால் சேர்க்கப்பட்ட**

நந்தியெம்பெருமான் சிவபிரானிடத்து வேண்டிய

பதினாறுபேறும்

இத்துடன் சேர்க்கப்பட்டு ஷெயாரால்

சிதம்பரம் கார்த்திகேயன் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

கலியுகாதி ஸ்ரீமுகவருஷ புரட்டாசிமீ

இதன் விலை] 1933. [அணா 4.



உ

வேலுமயிலுந்துணை.

புள்ளிருக்கு வேளூர் என்கிற

வேதபுரி

# முத்துக்குமாரசுவாமி பேரில்

பாடிய

# கந்தபுராணசதகம்.

---

## விநாயகர் காப்பு.




---

வெண்பா.

பூமேவு வேத புரிவாழ் குமரன்முன்
றாமேவு லீலையொடு தோத்தரிக்க—யாமேவு
கந்தபுரா ணச்சதகக் காப்பாகு மாலேக
தந்தபுரா ணப்பொருளே தான்.

## உற்பத்தி காண்டம்.

### நூல்.

பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

உலகெலாம் புகழ்கைலை மேற்சத்தி சிவபிரா னுபயபத முச்சிபூண்டன், புரிமைதவிர் தக்கனேர் மகளென்ப தறமுயன் றுத்தமன வுத்தரவினு-லிலகுமிம வரையரயன் மகளாகி மேனைகைக் கிருநிதிய மாய்ச்சிவஞ் சேர்ந், திடுதவஞ் செயமகேந் திரமதிற் சூரன்வா மிறைவர்பாற் கொண்டாளவே-யலகிலாக் கலையுணர்வு பெறுசனகர் முதனல்வ ரையமற நந்திமார, னன்றிவா ராதுகாத் திடுகவென் றறிவிலச் சினையில்வ ரறிவடக்கிவிலகுறு தவரொடது வாயிருந் தமலனுற மெய்ஞ்ஞான மோனசுகநீ, மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 1

ஒருகணங் கோடியுக மாயனை வரும்பெண்க ளுடனனு பவித்தவின்றி, யொளிர்படைப் பாதிசெய லோயுமா றுமையின்ப மொருவியோகின்பமுற்றுத்-தருநிழலி லுறைபவன் சூர்செய்துன் பாற்றாது சசியோடு கைலையணுகித், தடைகண்டு மேருவிற் சார்ந்தே சயந்தனொடு தகையமரர் சிறையுற்றதோர்ந்-துருகியுள முன்செய்தவ றொழியவே தற்குறித் துரியதவ மாற்ற வெதிர்வந், தொப்பிலெம் மகனொருவ னப்பெரும் பகைதொலைத் துமையளித் திடுமென்றுபோய்-மிருகதரன் முனிவரொடு கல்லா லதன்கீழ் விளங்குற வுளம்புகுந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 2

வாசவனு மனைவியைக் குருமனையில் வைத்துவிதி வாய்ச்சென்று சூர்செய்துன்பும், வந்தா னளித்தசொல் லின்புமங் கோதவவன் மாதவற்கவனுடன் போய்ப்-பேசவரி யோர்ந்திமய மீதுபார்ப் பதியைவெண் பிறைசூடி மணமியற்றிப், பெருமைதரு சுதனல்க நஞ்சுதன் றனையோகு பெயரவிடு கென்னவிதிவந்-தாசணுவு மின்மதனை யையனிட மவ்வா றனுப்பவவனொருவாறுதேர்ந், தணுகிவெள் வரைநந்தி யாலயர்ந் தவரவ ரறிந்திடக் கணைகளேந்தும்-வீசவழல் விழிதனி லொழிந்திடச் செய்தபா வித்தகனுளத்திருந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 3

அங்கவன் றேவியுறு துன்பமாற் றாதுபோற் றமரர்விடை யால்வரச்செய், தவர்வேண்டு விதமிசைந் திரதிமலை மான்மணத் தருடுமென விட்டைகூடித்-துங்கமுநி காளுவந் திடுகென்று கௌரிபாற் சோதிக்க வடிவமாறித்

தோன்றியாங் குண்மைகண் டிகழ்வுபுக ழாக்கொண்டு தூயதவ மொருவி மனையிற்-றங்கவிடை மேற்காட்சி தந்துதன் வரைவந்து தக்கவெழு முனிவோர்களாற், றந்தைபாற் பார்ப்பதி தாப்பெறுஞ் சம்மதந் தாழா துளைர்ந் துவக்கும்-வெங்கணா வணிவேணி யண்ணலுக் கருளோங்கு வித்தா யிருந்தபொருணீ, மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ் குமரனே. 4

அகமகிழ்ந் திமவான்ற னகரமுதிர் தெய்வீக வறிவுசெறி புலவனுள ளத், தமையுமெழி லுறவந்து பங்குனியி லுத்திரம தமைவெழுக வென்று தொழவே-தகமகேச்சுரனந்தி யாலனை வருஞ்சூழ் தரக்கிரீ டாதிவிதியாற், றுங்கிவிடைமேற்சென்று தன்மாமி யமுதுகொடு தாள்விளக் கிடவுவந்து-நகமணிக ணிறைவதுவை புரிசாலை யரியணையி னண்ணிவட பாலிழியவே, நமர்கணீ ரஞ்சன்மி னென்றுதென் பாற்செல்ல நன்குவிடை யருளவேகி-மிகமன தயர்ந்துமல யத்துறுங் குறுமுநியுண் மேவுமெய்ப் போத சுகநீ, மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 5

அந்தமண் டபமதிற் சீல்யாண சந்தரி யடைந்துதன் பாலிருப்ப, வகமகிழ்ந் திமவான் பதப்பூசை செய்துமனை யாளுதவு புனலின்மகளைத்-தந்தன மெனக் கையிற் றற்சாக்கியிற் கொண்டு சந்தோட மூடியெவருஞ், சயசய வெனப்பல் லியந்துவைத் திடவிருவர் சங்கீத மோங்கயடவார்-சொந்தமுடன் வாழ்த்திடத் திருவமுது கனியுண்டு தூமறை மணச்சடங்கு, தொன்மறை யவன்செயப் பான்வீற் றிருக்குநற் சுபகர மிகுந்தகாலை-விந்தரிய நாதமய வம்பிகா நாதமென வேண்டுபவ ரெண்ணுபலநீ, மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 6

அதுபோது மதனையிர நிக்குருவ மாகவரு வாகவேவர் கட்குமருளி, யம்பிகை சமேதன்விடை மேற்சென்று கைலையை யடைந்தமரர் விடை பெறத்தான், குதுகலித் தணையினுமை யுடனோங்க வுயிரெலாங் கூடியின் பொடுவாழுமாற், கூறுமொரு நாள்வலிய சூர்துன்பு தொலையவொரு குமர னருளெந்தையென்று பதுமனரி முதல்வேண்ட முகமாறு கொடுவெம்பகத் தீப் புலிங்கமுமையும், பார்த்தஞ்ச வுதவிமுன் போலிருந் தங்கியாற் பவனனுற் கங்கையுய்ப்ப-விதுசூடி யுளமென்று சாவணத் தவத்தில்வைப்ப விளையாடு சிறுமதலைநீ, மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதப்புரி வாழ் குமரனே. 7

அன்னதட மாமல ரிடத்தரி முதற்சூழ வவ்வவர்க ளாமுதல்வநீ, யாறுமகவாகியற மீன்முலைப் பாலுண் டமர்ந்துமுன் வெருவுமுமையாள்-

பின்னா ளிடஞ் சென்று காலணியின் மணிவந்த பேதையர்க ளானைமே
விப், பெற்றகரு வவர்பெரு வண்ணஞ் சினந்திடப் பேதையர்மெய் வெயர்
விலக்க-மென்னமிகு வீரர்தா வீரவா காதிநவ வெழில்வீரர் தமையுயிர்ப்ப
விறைகண்டு நீவிரெம் மைந்தனிட மெய்துகென் றிறைவியொடு வரவுமிம
வான்-மின்னனைத் தழுதூட்ட வுண்டுநற் றந்தையொடு விடைமருவு மின
வரசுநீ, மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 8

கூருண்வேல் விழியுமை முலைப்பாற்பெய் சுனையிலறு குமரர்தொல்
லுரு வாய்ப்பாங், குன்றுற விடுத்தரன் குன்றிடை யிருப்பநீ கூடுவிறல் வீர
ருடனே-பாருலாய் வானுலா யோடிவிளை யாடியும் பற்பல்விட மங்கள்புரி
காற். பாகசா தனனுதி யமரரமர் செய்துநின் பால்வெற்றி கொள்ளாது வெம்-
போருலையநாரத னுணர்த்தமந்திரி வந்து புகழ்செய்து பிழைபொறுத்தெம்,
புண்ணியா வருள்கவென வவரவ ரெழுந்துநின் பொன்வடி வுணர்ந்தேத்
தவே-மேருநின் றறுமுக மீராறு தோளன்றி மேனிமுழு தாத்தெரித்தாய்-
மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 9

பின்புமுன் போலிருந் தமரர்கோன் முதலான பேர்கந்த வரையின்
முறைகள், பிறழாது நின்பதம் பூசித்துமகிழப் பெருங்கருணை செய்தெங்க
ளுங்-துன்புபுரி நாரதன் மகத்தகர் மிகைக்கொண்டு தொடர்வீர வாகுதவி
யாற், றூண்டியமர் போதுபா ரதிகாத லன்கைலை தொழுதுவர நேர்ந்தகங்
கூர்-வன்புகண் டங்குசில வினவிவேதத்துமுன் வருகுடிலை யுண்மைபுகல,
வருமோ வெனக்கலங் கிடுமவன் றலைபொறு வகைபுடைத்துப்படைத்து-
மின்புரி சடாதர னறிந்தயற் கருளிமுன் வேண்டமெய்ப் பொருளளித்தாய்
மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 10

கருதிமுத் தமிழ்முநிக் குங்குடிலை யுண்மையது காட்டிநீ வந்த
சுனையிற், கண்டவமு தக்கொடி யொடுஞ்சுந்தரிப்பெயர்கொள் கன்னிமண
மாற்றவரமே-தருதியென வவரையிந் திரன்வேடர் தனையளாய்ச் சாரவிடை
செய்துமீண்டுத், தன்வரையி னின்றுபோய்த் தந்தையிடை யெய்துநா
டறுகண்வெஞ் சூர்செய்செயலைச்-சுருகியான் முதலியோர் சொல்லவுமை
பாகனுற் றேன்றுபதி னொருபடையுடன், றோலாத வேலா யுதங்கொண்டு
வீரர்புடை சூழவிர தத்திலேறி-மிருதிபுகல் விதியினமர் செயவெண்ணி
நிலனண்ணி விருதியங் கணமிகுந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு
பாலமர வேதபுரி வாழ்குமரனே. 11

வருபோது வழியில்வெஞ் சூர்த்தம்பி தாரகன் வதிர்ந்தகிர வுஞ்ச
நோக்கி வானவர்க ளஞ்சநா ரதன்முயன் றிடவீர வாகுவைப் பூதவெள்ளம்-

பொருவீ ரிளையரொடு போர்முன்பு புரிகெனப் போயமர்க் களமெதிர்த் துப், போர்தவிக லனிகமும் பூதருஞ் செய்தவெம் பூசலாற் பொலிவு மாழ்க-வொருவிலக் கருமெதிர்ந் தாங்குபுழை யத்தத்தி ஞேதத்தி லெறிய வாரி, யொப்பிலான் பல்கணை விடுத்தெதிர்த் தோய்ந்தெழுந் தொருபடை கொ டோட்டிமற்றும்-வெருவாது மாயநகர் புகவவன் பூதரை வெருட்ட முகி யாலறிந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ் குமரனே. 12

அதிகோப மொடுசென்று பூதர்வென் றதுகண்ட வவுணனுன் சொற்றெரிந்தே, யமராட வெதிராடி வண்டுகோ டிகடுவி யவனம்பு போக்கி யணுவு-மதியான் முகக்கை மருப்பறுத்திடவுநேர் மல்லாட விற்படையெலா, மாற்றிவே திரதமேற் சரமாரி பொழியமிகு வாளியாற் புவியில்வீழ்த்தி-யெதிர்சேனை யாவுந் தடிந்தவ னெழுந்துசெ னீந்தபடை யுய்ப்பவாங்கி, யேகிமலை யோடுமா யஞ்செய்ய வேற்படை எடுத்ததை விடுத்துமலையும்-விதிதேரு தாருகனு மறமயல்வீரரை விளக்கிபவ் வேலேந்திஞய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 13

ஆண்டரன் படைவீர வாகுபெற வன்பூத ரனைவரு மெழுந்துசூழ, வவணின்று மிமவரை கடந்து நற்றேவகிரி யதிலிரவொ டணுகியமரர்-வேண்டவவர் பூசனை யுவந்தமர்ந் தருளிவிண் மேவுதா ரகன்மனைவியா, மெல்லியற் சௌரிதுய ரோங்கவசு ரேந்திரன் விதிக்கடன் முடித்தயர்ந்தே நீண்டகல் மகேந்திர மடைந்துசூ ரன்பா ணிகழ்ந்தவை நிகழ்த்த வெம்பி, நேரிலான் றம்பியை யடர்த்தநின் பாலிக னிறைந்தமோ கன்றடுத்து-மீண் டமர்த் திறமே குறித்திருந் திடவிரவி வீரவவது விட்டுவந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ் குமரனே. 14

இரதத் தமர்ந்துபடை புடைவரக் கேதார மின்பிறப் பெய்துயிர்க் கீந், திடுகாசி நகர்பருப் பதமலை திருப்பதி யிலங்குதென் கைலைகண்டு-பாத நட மிடுமால வனநீங்கி நகர்சிறப் பாங்கச்சி கண்டுதீயாம், பருவத மிருந்து நவநீதபுரி கண்டுசேர்ப் பழமலை தெரிந்து முனிவோர்-காதலங் குவியவா னந்தநட மிடுமன்று கண்டுகா விரியின்வடபாற், கரைகண்ட மண்ணிநதி யிடையமரர் கம்மியன் காட்டுநகர் தன்னி லிரவால்-விரதஞ்செ யன்பாது சேய்ஞலூ ரெனநல் விருப்பமொடு வீற்றிருந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 15

பண்டைநா ளிந்திரன் காழியி லிருந்துறும் பாடுபகர் வரியதனி, பரிதியுத யஞ்செயத் தங்கைதயைப் பூசித்தோர் படைபடைத் ததிவீரர்தாம்-

அண்டைபுக விடைமருது மயிலாடு துறைபதிய லகாமுதல் கண்டுகமலா, லய மடைந் தளவில்பதி நீங்கிவெம் பாலேயு மறப்பரா சரன்மைந்தருங்-கண்ட யல் வரச்செந்தி னகர்மேவி யமார்சேர்க் கம்மிய னமைத்தகோயில், கதிபெறச் சிங்கா தனத்தெழுந் ருளிவிண் காவலன் கூற மலர்வாய்-விண் டருள் பொழிந்துமெய் வியாழகுரு வாலசுரர் விதமறிந் திடநினைந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 16

---

## அசுரகாண்டம்.

ஆறுமுக மீராறு தோளருட் கண்கள்கொண் டருளவே திருவுளஞ் செய், தாறுபிறை சூடியுமை வேறுவே றப்புரி யருந்தவத் துறுதிகண்டாங்-கூறுசுர வணவாவி மேவுதின துற்பத்தி யுரையாட வல்லருளரோ, வோது முன் காசிப னளித்தவவு ணர்க்கிறைவ னுதவுசுர சைப்பெயரினுள்-கூறு புக ரிடைமாயை விஞ்சைகற் றவளுற் கொடுத்தமா யைப்பெயர்கொடே, குலவிருத் தியையெண்ணி வெள்ளிமுயல் வானிதிக் குன்றின்வட பால் வியக்க- வீறுதவ வடிவான காசிப னிருக்கைபுக விளமயல் கொளத்தெரிந் தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 17

பின்னருந் தவனவ ளிணங்காது கங்கைசேர் பெயரமய லாற்றொ டர்ந்தப், பெருமாயை கதிரோடு மறையநின் றேங்கிப் பிணங்காது வரவு மவள்பாற்-சொன்னபடி யாமந் தொறுங்கலந் திருவருந் தொல்லுருவி லாது தேவாய்த், தூயவரி கரியாயு மறியாய்ச் சுகித்திடக் தோன்றுவார் வெயர் வுதந்த-மின்னருப லவுணவெள் ளத்துடன் சூரனுய் வெந்திறற் சிங்கமுக னுய், மேவலர் வணங்குதா ரகனுயெழுந்துபல வெறிகொண்ட மறிமுகியு மாய்-விண்ணமா மிருகமாய்க் கூடவா யிரலக்க வெள்ளமா யதில்வியந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 18

அனையர்பக லாகமுன் வடிவுறத் தந்தைசுத ரரியதவ மேவுகதை யொன்றறைகுவான் சுச்சகன் பெறுகவுச் சிகனேநோன் பகல்வித்து மனை யிருத்த கினைவுற் றுசத்தியன் மகள்விருத் தையைவினவி நிலைமைசெய வவ ளொர்யானை நேர்கண்டு மடியவிய மற்சூறித் துத்தவ நிகழ்த்தியக் கரியி டைப்பட்-டினையதோ விரதவா தத்திச்சை யாவற மெலாம்விற்ற தென்று தவமே, யீர்துகாத் துயிரளித் தொருமகன் மணம்புரிய வினியமிரு கண்டு தோன்றி-வினையின்மார்க்கண்டனைப் பெறமேன்மை யாந்தவம் விளைப்பி ரென வஃதுணர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 19

அப்புதிய மாயைமைந் தர்க்குமிகு செல்வமுறு மாறுரைத் தேகவ வரங், கமர்போது புகர்வந்து மகமாற்று விதநன் கறைந்தருள வடபுலம் போய்த்-துப்புடைய சூர்நின்று தொன்மாயை தருபொருட் டொகைபெறப் பதினாயிரந், தூவேள்வி செய்தரன் றோன்றுதுதசையரிந் துயிர்தொலைத் திடவும்வெந்தீக்-கப்புவிடு குண்டத்தி லாயிரஞ் சென்னியிடு காரரி முகன் மடியுமுன், கடுமிடற் றரன்வந்து தன்னருள்கொ டெழுசூர் கருத்துணா வெதுவேண்டிநீ-வெப்புறு தவஞ்செய்தை யெனவவன் பலவாக வேண் டவா வுந்தெரிந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ் குமரனே. 20

அத்தனு மூவந்துநூற் றெட்டுக மிருந்துபல் லண்டமதி லாயிரத் தெட் டாளுதி யெனத்தேரோ டாழியொரு சிங்கமு மளித்தளவில் படையு நல்கிப் பத்தமர் சகத்திர கோடிவெள் ளங்கொடேர் பகடுபரி யசுரர்சேனை, பாலித்தபின் சிங்க முகனோடு தாரகன் பரவமிகு வீரமுதவி-யெத்தலைகய ரெஞ்சத்தி யன்றியுமை வெல்பவ ரெனப்புகன் றேகமுனிமுன், னெய்துகு ராதியர் புகர்க்குரு விடத்தடைந் தெல்லா முரைத்திருந்து-வித்தக வியற்று நெறி யென்னெனத் தரமிலா வெய்யர்க் குரைப்பதோர்ந்தாய். மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 21

ஆவியிலை மற்றையவு மித்தைவடி விற்கடா காயமென நின்றுவெ ளியா, மம்பர மெனிற்றரும மென்றருந் தீதுநன் காயாது தேவரிறையை-நீவிரைந் தேசிறைசெய் தேவல்செய வும் புரிதி நீளண்ட வியல்பிதெனவே நேரிலான் படையோ டுருத்திர னலாததிசை நின்றவரை வென்று பிலமும் பாவியங் குள்ளாரை வென்றுவந் தரிதூங்கு பாற்கட லடைந்துழக்கப், படையைந்தினாற் படைபடர்ந் தரி யடர்த்திடப் பார்த்ததா ரகனெதிர்ந்து மேவிவெஞ் சமராடி யரியாழி யணியென மிலைந்தவொரு விற லறிந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 22

அத்தார கன்றிற மறிந்தசூர் படையோ டருக்கன்முத லவரோத்தவா னணுகவுந் தா தருரை யாலஞ்சி மகவானு மயிராணி யுங்குயிலதா-யொத்தாங் ககன்றிடத் தேவரைத் தகுவர்களொறுக்கவவர் வாழ்த்தவிடுவித், துயருமக லோகமுத லுற்றவர் துதிக்கவு முவந்தயன் பதநண்ணியே-நத்தாசி சொல் லவவண் வைத்தரித னுலகூடு நாடவெதிர் வந்துநெடுமா, னவில்வாழ்த் திடக்கொண்டு சிவலோகமுஞ்சென்று நாதனடி யேத்தியருளால்-வித்தார வண்டங்க ளிற்சிலவை நிறுவியே விண்ணாட்டுள் வரவறிந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 23

தன்றாயை யருடாதை யைப்புகர் சொலக்கண்டு தரணியிடை யவ ணொடணுகித், தன்றிருமுன் வந்தேத்து மமரரிறை யரியயன் றங்குழாத்

றுடுதோன்ற நின்றுரை யாரென முராரிமு னகந்தைகொடு நெற்றிக்கண் முதலேமலரோ, னினையாது தன்றெழி விழந்துபோய் நீடவ நிகழ்த்தியழ விழிகளிற்பே-யென்றுங் கெழத் துயர் வுறக்கனவில் வந்தவிறை யேவபதி னெருபேரிடத், திலகுருத் திரர்கோடி கோடியாய் வந்துதொழி லீந்தனர்க ளவரிவரென-மின்றுங்கு வேணியர னன்புமிக மேவுசூர் மேன்மைபெற் றதுதெரிந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ் குமரனே. 24

தென்றிசைக் கடல்வட கடற்கண் மகேந்திரத் திருவளரு நகரா சுரச். செல்வநக ரிடையிடைத் தீவினிற் பன்னகர் சிருட்டித்து நாவலந்தீ-வொன்றிரா யாநக ரமைத்திருஞ் சூர்தம்பி யுறுதானை தாரகனிருந், தொளிருமா றமரர் சீர்ப் புனைவர்கோ ஞசியொ டுணர்த்தவுந் தருவர்பெருமான்-றுன்றிநற் றெண்கடற் புனலமர ராட்டமுடி தாமரை யவன் சூட்டவத், தோற்றநக ரிடையெவரு மேத்துமர சியல்பினைத் தொட்டபொழு தேவரியைநம்-வென்றிதரு சமுகத்து வேண்டுதொறும் வருகென்று விடைசெய் வீறுந்தெரிந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ் குமரனே. 25

அம்புயத் தயனங்க ணமந்தோத விளவெயிலொ டாதவன் செல்ல மதிதா, னல்குதலு மல்குதலு மில்லதா யெழவெரி யழற்பணி புரிந்துகுளிர் வாய்த்-தம்புரத் துறவியம ஞற்படைத் தருவருட் சலியா திருப்பவாயு, தாராதி குப்பலேத் தள்ளவரு ணனுநாவி சந்தனு திகள்கலந்த-வம்புநீர் வீச விந் திரனமரர்குற்றேவல் வந்துசெய விசைமிக்கசூர், மதுவளக பதுமகோ மளை விபுதை சௌரியை மணந்துமண மாற்றுவித்தும்-வெம்புதிற லரிமுகன் கரிமுகன் பதிபுக விடுத்துவாழ் விபவமோர்ந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 26

பகைவர்வெரு வுறுபானு கோபனெரி முகன்வச்சிர பாகுவிர ணியனென்மகவைப், பதுமகோ மளைபெறவு மூவா யிரம்புதல்வர் பன் மனைவி தரவுமிளை யர்-வகையிலதி சூரனூற் றுவர்கள சுரேந்திரன் வாத் தவர்க ளஞ்சுசெயல்வில் வலன்வஞ்ச வாதாவி லாமறி முகத்தடுரு வாச ரைத் தழுவிவாழ்நாள்-நகைமுகச் சசிகவர்வை யுன்னியக் கொடியசூர் னாடொற்ற ராற்றுருவவே, நாயகியோ டிந்திரன் காழியுற் றெருமக னடத் தவா சியல்புணர்ந்து-மிகையுறு பான்பூசை செயநந்த நவனமுறு வேயாய்ப் புரிந்ததோர்ந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ் குமரனே. 27

இரவிமுதல் வழிபெரு தோங்குவிந் தத்திக விறப்பொன்வரை யிற்றவஞ்செய், திறைவரருள் குண்டிகைப் புனல்கொண்டு தாரக னிருந் தமா யாபுரியினோர், வரவவன் கிரவுஞ்ச மலையாயுள் வழிகாட்ட மயலுற் றடைந்துபின்பவ், வஞ்சனை தெரிந்துநின் வடிவேலி னிறுமாறு வன்சாப மிட்டுவிரைவிற்-றிரவிய வரைக்கெதிர் வரைக்கண்வந் ததுபிலஞ் செல்லச் செய் தசமுகிபெறுந், தீயரை மறிக்கறியோ டமுதருந் தித்தொலைவு செய் தொர்கொங் குக்கணித்தாய்-விரவுபழி தீரவர னர்ச்சனைசெய் மலயமா மெய்த்தவர் திறந்தெரிந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 28

காழிதனி லிந்திரன் பொழினீர் வறந்துமுநி கழறுமா றர்ச்சனை செயக், கணநாய கன்காக வடிவாய்க் கடத்து நீர் காவிரியதாக்கவிழ்க்க-வாழியமு தாக்குமுநி தேர்ந்தரு ளடைந்து குற் றாலத்தி லரியைமாற்றி, யரனாலய ஞ்செய்து வழிபட்டு மலயத் தமர்ந்தருள வைங்கரத்தோய்-வாழி யென் றேத்தி யக நிறைவொடு சிவபூசை மகிழச்செய் வாசவன்பால், வான வர்கள் வந்துகூ றிடையாம் படுந்துயர் மதித்திலா யுய்யும்வகையென்-வீழி வாய்ச் சசிமாது காதலா வென்றடியில் வீழ்ந்துமுறை யிட வறிந்தாய், மேத கைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 29

வலியசூர் மகமொன் றியற்றியதி யாமெலாம் வாழவோ மதிகொள் வேணி, வள்ளலருள் வரமென்ன வெளியதோ வவனேவு வகையே புரிந்து சுரர்காள்-நலிவுற்ற தன்றியுஞ் சிறையுற்று மனைவிடுகை நகையென் றிவண் கரந்தே, னம்புவார்க் கருணம்ப னுக்கீ துரைப்பதென நவிலிந் திரன்சசிக் கார்-கலியைக் கடைந்தரன் விடமயில வமுதெழக் கடல்வண்ணன் மோகி னியதாய்க், கடவுளர்க் கவுணர்க் கிலாதிட மறைந்துண்டு காணிருவ ரிரவி மதியை-மெலிவிப்ப விட்டாற் கூடியருன் சாத்தனையோர் மெய்த்துணை செய் தேகவோர்ந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 30

கயிலாய மதிலிந்திரன் யோகபரன் முனங்காணா திருப்ப வொரு நாள், காழியிற் றுன்முகி யொடசமுகி யடைந்து சூர் கலவிசெயு மாறெண் ணியே-யயிராணியைப்பிடித் தேகவையன் றனுளாம் வீரமாகாளர் போ, யவள் விடுஞ்சூலமுங் குன்றமு மொர்வாள் கொண்டகற்றி யளகங்குறைத் துக்-கயிலொன் றறுத்துத் துன்முகி கரந்துணி படக்கண்டு சசிதன்னை முன்போற், காவல்செய முனியோத விந்திரன் வந்து மாகாளரை புகழ் புரிந்து-வெயில்வீசு பொன்வரையி லுரிய மாதொடுசென்று மேவு செயலுந் தெரிந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ் குமரனே. 31

மறிமுகத்தாடுன் முகத்தாளுடன்சென்று வலியபுல் லவுணர்பெருமான் மாடுவீழ்ந்தலறி யயிராணியை யுனக்கென்று வெளவிவரு போதிலங்கை-பறிகொடுத்தே மெனச்சூர்கொண்ட கோபமது பார்த்தவன் பாநுகோபன், பாகசாதனனை மனையனைவருட னவியுமா பற்றிவர விடைகொடேகக்-கறியெயிற்ற வனுமயனு லனையர் தங்கையைக்கண்டு தங்கையை நிறுத்திக், கடியதுன் முகிமகனுடன்செலச்செய்து வெங்கதிர் முதலியவரை நோக்கி-வெறியொடு வெடித்த சொல்லால் வினவிவன் சிறையின் மெலியவைத்தது முணர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 32

அவ்வணஞ் சிறையூடு மற்றவரு முற்றபோ தயன்வேண்ட வசுரர் கோமான், அவ்வவ ரிடஞ்செல விடுத்திருந்தான் பின்னரவன் மகன் பாநுகோபன்-றெவ்வடும் படையொடுங் காழியுற் றங்கெலாந் தேடியுஞ் சசியையறியா, தேவிண்ண கம்புகக் கண்டுவெருளுஞ்சிறிய சிர்ச்சயந் தன் சிறிதுபோ-தெவ்வமுற்றேதுணிந் தெதிரவான வரவுணரி கலமர் செயக் கயிற்றால், யாப்புண்ட வமரரைக் கண்டவிந்திரன் மகனெடுத்தகைத் தநுவளைத்து-வெவ்வழற் கணைதொடுத் தெதிர்விடுத் தவுணர் தமைவென்ற வலியுந்தெரிந்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 33

சூரன் மகன் வெஞ்சரம் விடுத்திடத் தேவர்கோன் சுதன்மடித்தம் புபலவாத், தூண்டி விண்ணுணியைப் போக்கவுந் தோலாது தொடுகணை கண்மீது தூர்ப்பத்-தேரது சிதைந்திடக் கணைதூவ வேறுமொரு தேரேறியனவில்வாளி, சிந்தியே தந்திமேல் வீழ்த்தியது தேர்ந்துபகை தெறுதறுகண் வெள்ளையானை-பாரநாற்கோடுகொண்டுர மீது பாயவவை பட்டுவிழவதையும் வீழ்த்திப், பாசங்கொடார்த்துச் சயந்தனைத் தேவர்பல பணிமாதரொடு கொள்ளவே-வீரவயிராவ தந்தன்கோடு வெண்காடு மேவியுற்றது முணர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 34

---

## மகேந்திர காண்டம்.

செந்தினகரிடையிருந் தசுரர்செய லாதிபல தேவகுரு வாலுணர்ந்து சிட்டரைப் பரிபாலனஞ்செயத் துட்டர்பணி தெவ்வாய சூரன் முன்பு-கொந்திலகுவாகையணி புகழ்வீர வாகைக் குறித்தமரர் சிறையை விடுமா, கூறிமீண்டிட விடுத்துறவுநீ வீரர்கோன் கொடியசிறை சேர்சயந்தன்-புந்தி

தேற் றிட விந்திரன் சொலத் தம்பியர்கள் பூதமன் னவர்களிற்கப்-போயாழி யின்கரைக்குயர் கந்த மாதனப் பொருவில்வெற் பேறிமீண்டு, வெந்திறற் சூரனகர் கண்டுவிண் வீதியில் விரைந்துசெல வலிகொடுத்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 35

அம்மலை கலங்கவெழு வீரர்கோன் வடதுபா லாளிமுக னுறைபு லணுகி, யங்கவன் சூரனைக் காணுமாறன்றுசெல வடர்படைகொள் வீரசிங் கன்-நம்மதொரு காவலிடை வந்ததா ரென்றுசமர் நாடியெதிர் வந்துசூழ, நகுவாளினுக் கிரைகொடுத்திட் டிலங்கையெனு நகிரமலை புகவுமாற்றிப்-பொம்மலொடு வளையுமதி வீரனுமறச்செய்து போய்க்கொடுஞ் சூரனகரிற், பொருமளவில் சேனையொடு கோரனதி கோரன் வட புலவாய்தலுறுத லேக்கி-வெம்பலிடு சூரன் வலியுன்னி யுனையல்லாது வெல்வதரி தெனவு ளுற்றாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே.

கீழ்த்திசையின் மேதிக்க ணன்வீர பாநுவொடு கிளர்திறங் கண்டு தென்றிக், கினிலுலவு போதுகய முகனேக்கி யெதிர்வந்து கிரிபறித் தெறியவுடனே காழ்த்திறப் புயனவன்முகக் கைகளாயிரங் கண்டித்து மீண்டுமுடலக், கைகளீராயிரந் துண்டாடி வாள்கொண்டு கால்கொண்டு மூதைத்துவந்து, பாழ்த்திருட்ட வுணர்மிடைதலி னனுவிலுருவாய்ப் படர்ந்தெறின் மகேந்திரத்துட், பாநுபகை யக்கினி முகத்தனிரா ணிய னுறையுள் பார்த்தபின் றரும கோபன்-வீழ்த்திரு மனைச்சிகர மேவச்சயந்த னயர் விபுதர்கன வினுமருளினய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 37

அறியாச் சயந்தனுக் கமாருக் குண்மைசொற் றுதிமுத னிகழ்வு கூறி, யகமகிழ் தரப்புரிந் தேகநீ மந்திரி யிலமர் வீரவாகு மவணிற்-பறியாச் சிறைக்களம் புக்கவர்க் குள்ளது பகர்ந்தவண கன்றுசூரன், பாவபே ரவை யூடு தொல்லுருவொ டணுகியப் பதகனெதி ரணையிலேங்கிக்-கறியாவு தட் டையச் சூரனியாரெனக் கந்தவே டுதனியானி, கடவுளர்கள் சிறைவிடுத் தாளுவைய தில்லையேற் கடிதின்மா ளுவையென்றுபால், வெறியார்ந்த வாய்ச்சிறுவ னுரையீது கொல்லென தின் மேன்மைசொற் றிறமளித்தாய்-மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 38

ஆணவத் தாலுனது புகழமுது செவியுண வவுணர்கோன் விடை யால்வளர், தாயிரந் தானவர்கள் வரவுந் தொலைத்தவ ணகன்றுவரு வீரர் பெருமான்-றுணவப் பாயித விலக்கரொடு சதமுகன் சூழத் திரும்பிநின்று, சூளிகையொர் சிகரியைப் பரிசெய் தெரிந்தமர் தொடர்ந்தாடி யுர்

தொலைத்தே, நாணவக் கள்வர்கள் பெரும்படிவ மொடுநின்று நாடி யைம் பது வெள்ளமா, நடலையுறு காவலர்கள் கண்டடர வடியொடுதை நல்கி யுடன் மோதிமற்றும், வீணவத் தொழில்புரிந் துயிர்வவ்வி நின்றுமுனை வேண்டி வலியுற வளித்தாய் - மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 39

நூபுர மளிக்கவந் தவர்புதல்வர் கோணங்கொர் நொடியில்வரை கொண்டு சூரா நொய்யனுறை வைபவப் பெருமன்ற நூறியே நூறுபத்தாந் தொகையுளோர்-ஆயிரத் தொகையவ் வணங்கொண்டு கிட்டுமுன் னந்தரத் தேபல் விதமாய், அளவில்சீர் நகரழித் திட்டமர் புரிந்தமர்க ளழிதரச் செய்துகண்டா-ரோபுதுமை யென்றுசென் றுரைசெயச் சூரன்மக னொரு வச்சிர வாகுவென்போன், ஒல்லென வெழுந்துவிடை கொண்டுபல் படை சூழ வுதடுமென் றெளிரு மொருசேர், மீபுலப் பட்டெதிர்ந் தன்றுபல் சேனைகளை வென்றுநின் றிடவுளுற்றாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 40

நின்றவச் சிரவாகு வெஞ்சினத் தாழ்ந்துசில நெடியகோல் விட னொடியிலே, நெறுநெறென் றொடிபடக் கண்டொளிரும் வீரபுய நிருபன் மற்றம்புபலவாத் - தன்றற்வுந் துணிபடக் கண்டுபதி னுயிரஞ் சுடுசரந் தாண்டைநைந்து, தண்ணெனத் தேரினை யுதைத்துவே றிரதமேற் றேன்ற வது தொட்டெரிந்து, பொன்றவந் திடுமவனை வாள்கொண் டறுத்தந்திபுக விலங் கையினுமேவிப், பூசல்புரி யாளிமுக மாயிரம் பெற்றவொரு பொல் லாத வவுணர்மடிய, வென்றட்ட காசம் புரிந்துநீ யமர்செந்தின் மேவிமுன் னிற்கமகிழ்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ் குமரனே. 41

வந்துபணி வீரர்கோன் சூரன்கொ ளெண்ணமொடு மற்றையவு மோதவருளே, வடிவா யிருப்பநீ யவுணர்கோன் றன்மகன் மடிந்ததுயர் மாற்றியயனுல், நந்துநகர் கண்டுனது பாலேவு தூதரா னவவீர ரோடிலக்கர், நகுபூதர் வெள்ளமீ ராயிரந் தலைவரிரு நான்குசேர் நூற்றுவருடன், மூந்து தா ரகனைவரை யோடயிற் கிரைதந்து மூதெயிற் செந்திலுற்று, முதல்வீர வாகுவால் யாளிமா முகனுயிர் முடித்தசெயன் முற்றுமோர்ந்து, வெந்துளந் தமரைவரு வித்துநிகழ் வெல்லாம் விளம்புவா னுள்ளமோர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 42

புலவரைச்சிறையிட்டதாலாதன்குமரனிப் பூவிலென் றம்பியுயிரைப் போக்கியுந் தூதனை விடுத்துநக ரழிபடப் புதல்வனுயிர் வவ்வியிர்தத்- தல

முறவு முன்னினுன் சூழ்ச்சியென் னெனவவுணர் தமதாற்ற லுரையாடவத், தகுவர்பெரு மான்முன்பு சிங்கமுக ஞந்தம்பி சார்ந்தைய கோவுனக்கு, நல புந்தி கூறவொரு வருமின்று மேல்விளைவு நாடிலா யின்றுநேர்ந்த, நகை யறிந் தமரர்சிறை விட்டிலாய் வரநல்கு நாளரன் மொழிமறந்தாய், வெல வந்த வேலனிகல் வேண்டா வெனப்பல விரித்துங்கொ ளாததோர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 43

பொய்யும் புகன்றுசிறு பாலனுக் கஞ்சியிப் புன்மொழி யுரைத்தா யான்- பொருவிலா வரமெவர்கள் போக்கவல் லாரெனப் புந்திநைந் திடு தம்பிமேற், செய்யும்வகை யின்றியச் சிவபிரான் றன்னெற்ற தெய்வக் குமாரனுனஞ், செல்வங் கவர்ந்திடத் திருவுளத் தெண்ணினுன் சிறுவனன் றருவனுருவன், உய்யுநெறி காணுது மறைதேட வருவுருவ மொன்றின்றி யாவுமான, வொருவனன் புக்கெளிய னெளியனுக் கொளியாகி யுறுசிதா னந்தனென்று, மெய்யுரை வழங்கவுங் கேளாதிகழ்ந்தசூர் வீறிடத் துணி வளித்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே.

இன்னமறை மொழிசொலத் தன்னையிகழ் வெஞ்சூ ரிணங்கலூழ் வலியுமெண்ணி, யெவர்கண்ணு மைந்தொழி லியற்றவல் லானுளத் திச்சை யார் மாற்றவலரென் - றன்னவன் கோபந் தணித்தமர்த் தொழின்முயன் றூற்றுவேனி யானென்றபோ, தகமகிழ்வு செய்துவிடை தாவுமீண் டவு ணர்க்கு ளறிவுசெறி சிங்கமுகனு - மன்னவ னிருக்கைபுக மற்றவரு மேகவு மகேந்திரத் தினிதிருந்து, மாதவப் பேறுடைய வொருசூர பன்பன் மடங் கலணை மீதொளிரவே, மின்னகுபன் மாடமலி செந்தினக ரிற்கருணை விளை வினைகள் பலமுயன்றாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 45

---

## யுத்த காண்டம்.

அகலெழின் மகேந்திரத் திவ்வண மிருக்குமவ் வவுணர்கோ னுதி யொழித, லறிவித்த் தென்னவிரு ளகலவொளிர் வெற்றிவே லையகின் மொய்ம்பி னெழல்போற்-பகலவன் கிரணம் பரப்பவிண் ணவர்படைஞர் பாவவிர தத்திலேறிப், பௌவங் கடந்தசூர் முதுநகர வடதிசைப் பாலடைந் தமரர்புனைவோன்-ககனமுக டொன்றேம கூடமா நகரொன்று கடிதிலுன் கருணைகொண்டு, காட்டவொளிர் சிங்கா தனத்தமர்ந் தருளுமுன் காட்சிநா ரதனுணர்த்த, மிகவிறு சினத்தொடு நிசாசரன் றூதரை விளித்தாணை புரிவ தோர்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே.

வாரிமுதல் வனைவெகுண் டொற்றருரை யுந்தேர்ந்த வலியசூர் பானுகோபன், பரவிடுத் திடவுமிரு பதினுயிரம்வெள்ள மானசேனைகள் சூழவே-காரிதோய்ந் திடுபடைக் கலமுப்பதாயிரங் கந்துகம் பூட்டுதேர்மேற், கைக்கொண் டமர்க்குவரு செயனுர தன்சொலக் கருதிநீ வீரவாகே-போரியற் றற்கருளி வீற்றிருந் திடவுமப் பொருவிலான் றெழுதுவையம், புக்குநற் படைகளொ டிலக்கர்களொ ராயிரம் பூதவெள் ளங்கண் முதல்வர். வீரியங் குன்றுத வீரரெண் மர்கள்சூழ வெய்யனே டெதிர்ந்த துணர்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 47

பாதகன் றனையொடு பூதரும் படைகொண்டு பயிலவவ ரவர்பட்டுளார், பாரிடர்கள் சிறிதின் றனையொடு சேனைதேர் பற்றிமோ தலுமுடையவே-தீதகத் தவுணர்க்கு ளனலியொடு சண்டனெடு செறிபூத ருட்சிங்கனுங், தெறுமாய னேடுநீ லனுமறி முகத்தனெடு சீறுமது வுந்தொடர்ந்தே, காதமர் புரிந்திட விலக்கரொடு தண்டகன் காரவுணர் தமையொழிப்பக், கண்டுவெகு[illegible] பானுகோ பன்சரஞ் சிந்தியெதிர் கருவவக் கிரனுமூண்டு-வேதனைசெய் தவனுல் விழுந்திடப் பூதருடன் வென்றுநின் றதுமுணர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 48

வீரகோ ளரிவீர பாநுவீ ராந்தகன் வீரதீ ரன்வீரமுன், மேவிய மகேந்திரன் மகேசன் புரந்தரன் வீராக் கதனென்வீரர்-தீரமொ டெதிர்ந்தமர் செயற்கரிய மாலயன் றிண்படைபல் படையால்வெலத், தேர்வீரவாகுவு மெதிர்ந்திடப் பானுபகை செவ்வேளு மல்லைதுளபத்-தாரவனுமல்லவே தனுமல்லை தூதவென் றகையறிந் தில்லையமர்செய், தாவல்லையல்லையென வேவலிமை காண்குவஞ் சாற்றுவதி லென்னென்றுபல்-வேரங்கலங்குபுய வீரன் புகன்றுநின் மெய்யருள் குறித்த துணர்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 49

அப்பாநு பகையப்பு மாரிபெய வெதிர்பெய்து மவனெடு சுழன்றுதேர்மேல், அம்புதூர்த் துத்தடுத் துத்தநுவொ டித்துமம ராடுதிற மோதுமவரார்-தப்பாதொ ராயிரமொ ராயிரஞ் சரமெய்து தநுவம்பு போக்கிமௌலி, தள்ளியா ணத்துணித் திடவுமேற் சாமாரி தறுகணன் வாரிபொழிய-ஒப்பாரு மில்வீர வாகுமத் தகமீ துறுங்கோல் பறித்தெறிந்தே, வொவ்வொரா யிரமம்பு முகமார்பு தோள்கரத் துந்தநைந் துதிரமொழுகும்-வெப்பா லுளங்குலைந் தப்பாவி யிரதமேல் விளிவின்றி நின்றதுணர்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 50

மற்றுமுள சேனையைச் சின்னபின் னஞ்செய்து வன்பூதரோடிலக்கர், மருவவீ ரர்கடுன் னநின்றங்கு மகிழ்வீர வாகுமுன் பானுகோபன்-

றுற்றுபதி ஞயிரங் கோல்கொண்டு தேரினைத் தாள்செய்து கணைகடுவத், துகளிலான் றுகள்செயவு மொவ்வோர்தே ரேறியுந் தோற்றுவன் மோகவேல் கொண்-டெற்றுபு மயக்கநீ மாறுவிட் டேதெளித் திடவீரர் கோனான் வேல், எய்புமா றுன்னவே வஞ்சகன் வெருண்டோட விரவியிது போது மென்று- வெற்றுள மகிழ்ந்துமேல் கடல்புகப் பாசறையில் வீரரொடும் வீற் றிருந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே.

முதனு ளமர்த்திறங் கண்டுதுயி லாதன் முற்றுமோர்ந் திடவெழுந் தான், மோகவேல் விட்டொளிந் திடுமகன் றுன்பறியு முனையவா ளவுணர் பெருமான்- கதமோடு தம்பிமார் புதல்வாசுரேந்திரன் கறுவுமதி சூரனென் போன், கடல்போ லிலக்கவெள் ளஞ்சேனை யுடன்வரக் கடிதிலொரு தேரிலேறி-வதமே புரிந்திடக் கருதிவரு கோரமது மகவான் கலங்கியோத, மாமணித் தேரேறி யபயஞ்செய் திளையரொடு வன்பூத ரங்கெதிர்க்கும்- விதமே விடுத்தவுணர் சின்னபின் னம்படமர் வேடிக்கை கண்டிருந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 52

தேர்புரி கரித்திரள் சிதைத்தவுணர் தமையட்ட திண்பூதர் மேல் வெருண்டு, சினவாளி தூர்த்தார வாரஞ்செ யரிமுகன் செல்வனு மதிசூரன் வன்-மார்பறத் தண்டஞ் செலுத்தவுக் கிரனவனு மற்றெருகேத றேறியங்கே, வனமியமன் வாயுவதி மால்படை விடுத்திடவும் வாய்மடுத் தைந்தெழுத்தாற், சீர்பா வான்படை யரன்புடை சேர்த்துவிடு திண்கதைகொ டேயடிததுத், தேய்த்துயிர் வதைத்திடத்தாரகன் செல்வனுந் திறல்கோள சுரேந்திரனுமே வேர்பரிந் தொழியவா யிரம்வாளி பூதர்மேல் விட்டுபின் றதில் வியந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 53

பூதர்க்கு ளுன்மத்தன் மந்தனொடு சிங்கன்விற் பொருபடைத் தலை வர்களெலாம், போரிட் டிளைத்திட விலக்கருட் டண்டகன் பொருவில்சோ முகன்விசயனே, டேதக்க வேனையரு மவ்வா றிளைப்பவுன் னிளவலாம் வீரவாகு, மெதிரேறி யசுரேந்தி ரன்றேர் தநுக்களை யெறிந்தாட வவனோர் கதையால், மோதவு முதைத்துவடி வாளாண் மடித்திடவு மூடர்கள் வெருண்டோடவே, முனிவுமிகு சூரபன் மன்கண்டு தநுவளை முழக்கத்தி ஞற்கலக்கி, மேதக்க பூதரை யிலக்கர்களை வாளிதூஉய் வென்றவலி யுந் தெரிந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரிவாழ்குமரனே.

முந்தியெதிர் வீரகு ரியன்விழுந் திடவுமிக முக்கீர ராக்கதன் கோன், முன்பெய்து விழவீர மாமகேந் திரன்வாளி முற்றுஞ் சொரிந்து விழுமே-பிந்திமிகு பகழிதூஉய் வீரதீரன் விழப்பெறும் வீரமாகேசன்,

பீடுற்ற பற்பல் லவந்தூண்டி விழவும் பிறங்குவண் டுகள்கோடிகொண்-டுந்தியுன் வீரகோள ரிகலங் கிடவீர துறுபுரந்தரன் விசிகமே, யுடன்வீசி விழவீர வந்தகன் சுடுகணைக ளோசசியுஞ் சோர்ந்துவிழுமால் - வெந்திறற் சூரனின் வாறுசெயு மமர்வலி விநோதங்கள் பார்த்திருந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 55

எண்மர்கள் விழக்கண்டு மெதிர்வீர வாகுதனை யிகற்சூர பன்மன் முன்னர், எந்தையாங் கந்தவேட் கொருதூத னன்றியுமே யெல்லாஞ்செய் வல்லேனுளக்-கண்மறைந் திடுவோ யமர்த்தொழி னடத்தவே கருதெனக் கண்புகைந்து, கடியகோல் விடவிடக் கணையா லறுத்துக் கறுத்தவன் றேருடைத்து மண்மகள் கலங்கவம ரெதிராடி வெகுதெய்வ வன்படை விடத்துணித்தும், வாகுவாளேதடுத் திரௌத்திரகாரமா மாப்போர் புரிந்து மந்தோ - விண்மன துலைந்திடத் தண்டா லயர்ந்துதேர் மிசைவீழ்ந் திடத் தெரிந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிருபாலமர வேதபுரி வாழ்குமரனே.

திறல்வாகு செயல்கண்ட போதே யெதிர்ந்துபொற் றேர்மிசை விளங்கநீவன், சேனையொடு வீரர்துணை யின்மையா லவுணர்கோன் சிறு பாலனென்றிகழவே-மறமுளாயறமிலாய் நீதிதவிர்பேதாயிவ் வார்த்தையென் பாலனேனும், வன்மைபா ரானுதற் கண்ணழற் பொறியென்று மதியமர்க் கெதிர்கென்னவே, யறமிலா தண்டமுழு தாண்டவன் வெகுண்டுகணை யலகிலா துய்ப்பமதியா, தவைதடுத் தனதுசீ ரறியாத வவன்மீதி லம்பே ழிரண்டு பெய்து- விறலுளா ஞயிரஞ் சரமெய்து மற்றுமொரு வேல்விடச் சிந்திநின்றாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ் குமரனே. 57

அம்மம்ம வெஞ்சூ ரெதிர்ந்தெதிர்ந் தாடுமம ராற்றவல் லவருமுள ரோ, ஐயநீ விளையாடல் போலவன் விடுங்கணை யறுத்திரத மவைதகர்த்துத், தெம்மடையர் குலையவோர் மதாணியொடு மௌலியைச் சிந்திவளை யவுணர் குழுவைத, தேய்த்தயன் மாலரன் படைவிடக் கைக்கொண்டு சிலபுந்தி புகலமாழ்கி - நம்மனை புகுந்துபல சேனைகொடு வருவமென நடலையுடை யவன்மறையவே நாடுபூ தர்களெழுந் துடனேகி யன்று றனகாளித் தங்கு வெகுபேர்-விம்மத் தொலைத்துவர வெய்யோன் கடற்புகவு மீண்டுபா சறை யமர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே.

இப்படி யிரண்டாகு நாளேகி யிரவியெழ-விரவிவெகு ளானெழுந்தே யின்றுவெல் லுவனெனத் தந்தைபால் விடைமாயை யிடையொர்படை பெற்றிரதமேல் - எப்படைக் கலமுந் துணிந்தெடுத் தைம்பதா யிரவெள்ள

மாஞ்சேனையோ, டெதிரவெதிர் வீரர்கோ னவுணரொடு பூதர்க ளிலக்க ரெண் மர்கடொலையவே - யப்பகைவன் விடுசரத் தெதிர்சரந் தூவிநின் றவனோடெங் கனுமுலாவி. யமராடி யவன்மார்பு துளைபடக் கணைகடூஉ யமரர்படை கொண்டனுப்பு, விப்பமா ரும்படை விடுத்துஞ் சயித்துமுனை வேண்டிநிற் பதுமுணர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே 59

அம்பரத் திடையொளித் தனனுத வன்பகைஞ னுதவனு மகிழ் கொண்டுமே, லம்பரத் துற்றனன் பின்னுமவன் விடமாயை யாம்படையை யம்பரத்தே, யும்பர்கள் கலங்கும்வகை வீழ்ந்தயரும் வீரர்கோ னுன்வேல்செ யருளாலெழுந், தொன்னலன் புரமேலே வாயிலிற் புலிமுக னெழிந்திடச் செய்தரண்கால் - வெம்படை விடுத்திடித் தெரிகொளுவ வெரிசெய்படை விட்டபொழு தேழுமுகிலும், வெய்யன்விடை யான்மழை சொரிந்தழித் திடலும் வெகுண்டுகண் டோட்டியருளே - விம்பமா முனையவண் சிந்தை செய் தவுணர்களை வெல்லநின் றதுமுணர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 60

இதுதெரிந் திடுசூரன் முன்னரன் றிரவில்வந் திரணியப் பேரறி ஞநீ, யிமையவர்க ளிடர்படச் செய்தபா வத்தான மிறைவனருள் குமர வேளே- முதுசினங் கொண்டழித் திடவந்த தின்றுநா முன்பணிந் தெமை யளிப்பாய், முதல்வவெனி லருள்செய்யு மென்னவே தந்தைவெகு முனிவு கொள மாற்றிவெம்போ, ரதுசெய்வ மென்றுவந் தவுணனு தலினெதிர்த் தமராடி வீரவாகு, வண்ணலும் பூதர்களு மாற்றுமம ராற்றும லறிவினு லசுரர் முழுதும் - விதருடி மகவான் மடிந்திடுத றிண்ணமென மீன்வடி வின் மீந்ததுணர்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 61

ஆகவிம் மூன்றுநா ளேகவிருள் வலியனுக வறிவில்வெஞ் சூரன் விடையா, லக்கினி முகத்துமகன் வந்தெதிர்ந் தமர்வலிந் தாடிவன் பூதர்கள் வெகுண், டேகவீ ரர்க்குட் புரந்தரன் வலிகுன்றவீசனருள் படைவிடுத்தே- யேழுவீ ரர்களுயிர் கவர்ந்திட்டும் வீரவா கெதிர்சமர் புரிந்துதேர்மேற், சோகமுற் றங்குவரு காளியமர் செய்துந் துதித்தேக மிகுவாளி தூஉய்த், தாயன்விடு கணை [illegible] லறுப்புண்டு தொலையவே தோன்றுத வீரரெழுவர்- வேகமுற் றியமன்ற கைலாய மேவிவா வீரர்கோன் மகிழ்வ துணர்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 62

மூவாயி ரம்புதல்வர் சூரன்விடை யாற்பூதர் மூன்னவுணர் பொருத வெகிரோ, முட்டியவ ரவர்படச் கணைமழைகள் கொட்டிவெகு முனிவோ

டிலக்கரைவெலத்- தாவாத புகழ்பெற்ற விசயனுஞ் சோர்ந்தெதிர் தளர்ச்சி
யின் றடவெழுந்து, தரைகிழிய வனையர்நின் றமராட மிகுதுன்பு தாங்கி
யுனை யுன்னியிதுபோ- தாவாமுன் வந்தெமைக் காவா யெனச்சென்
றளித்தாயொர் காரிப்படை, யதுகண்டுடன் மத்தன்மா யைப்படையை
யேவநீ யருள்படை விடுத்துவிசயன்- மேவார்கண் மீளா தொழித்திடத்
தினகரன் வேலைபுக் கிடமகிழ்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு
பாலமா வேதபுரி வாழ்குமரனே. 63

தருமகோ பனுமெழுந் தன்றிரவு சூரிடைச் சாற்றிமதி சிலவளைந்து,
சாடுவே னென்றுவிடை கொண்டவுணர் சூழத் தகும்புண்ட ரீகமுதுகே-
வருமளவி லேசமர்க் களநண்ணு பூதரும் வாளவுணர் குழுவுமசுர, மந்திரிக
ளோடிலக் கருமுருத் துப்பொருது வாடவேவீரபாநு-பொரும்வீர மாபுரந்
தரனெதிர்த் திடவவன் புண்டரீ கங்கலங்கப், போய்வீர வாகதை விழுத்தி
மிகு படைவிடும் புண்ணியப் பகையழித்து-விருதுகொள ஃவகரி யெழுந்து
துதி செய்துதிசை மேவியுற வுள்ளுவந்தாய், மேதகைய ரோதுமிரு மாத
ரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 64

நாலாகு நாளிரவு பகலா வமர்த்தொழி னடக்கவெஞ் சூரனுள்ள,
நவியவிருள் வலிவரப் பாநுகோ பன்புந்தி நைந்துய்யு மாறுபுகல- வேலாத
சூரன் கடுத்திட வெகுண்டுமற் றென்செய்வ தென்றுகூளிக், கிரைதரு பறந்
தலைக் களநண்ணி யவரவ ரெதிர்த்திடப் பலவிதத்துந் - தோலாது நின்
றெதிர் பெரும்போர் புரிந்துமிகு தொந்தரை யடைந்துவிண்ணிற், றண்
ணெனத் தாவவும் விடாப்பகைகொள் வீரர்கோன் றுண்டாடி யுயிர்வௌ
வியே- மேலா மகிழ்ச்சிகொடு மீண்டுநின் மெய்யன்பு மேவுதிற முந்தெரிந்
தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 65

பாநுபகை யானவரு மைப்புதல்வ னொழியவே பான்வரம் போன
தென்றுட், பட்டுமறி வில்லாத சூரனே தம்பிபாற் பலதூத ரைத்தள்ளவக்-
கோனுளந் தடுமாறி வருபோது நகர்பதும கோமளை புலம்பநோக்கிக்,
கொடியனிட மேவமுற் றுங்கூறி யின்றுநீ குமாவே டனைவெல்லையேல்-
லனுயிர் தரிப்பனென் றேதவரி முகனடைந் துத்தரக் கடலிலோங்கு,
மூரிலுண் டளவாப் படைச்கலமிலக்கமா யுறுவெள்ள மானசேனை-மீனுலவு
கடல்போற் புரண்டுவா வந்தசெயல் விபுதர்கண் டயா வோர்ந்தாய்,
மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 66

அப்போதுன் விடைகொடெதிர் வெகுள்வீர வாகுநின் றாயிரம்
யோசனைபாய், பங்கமுட னையிரஞ் சிங்கமுக முங்கொண்ட வடலவுணன்

வளைபூதருந் - துப்போடு பொருதப் பிடித்துப் பிசைந்துதன் றுளைமூக் குயிர்ப்பெறிந்து, தூசெனக் கண்டுமேல் கீழெறிந் துடல்வீரர் தோற்றிட விலக்கரையடக்-கைப்போர்ச் சிலைக்கணைக டுஉய்த்தானே யவுணரைக கல கலத் திடவடித்துக், கடியதேர் தனினின்று வந்துவந் தமராடு காளை முதன் மடிபடச்செய் - விப்போ மெனக்கொதித் தன்றுசன் னத்தமொடு மிடலம்பு தூர்த்ததோர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 67

அரிமுகன் மக்களா நூறுபேர் தமைநூறி யங்கூறு பாடிலாதே, யைந்நூறெ டைந்நூறு கணைதூவு மவுணர்களை யவ்வாறு விட்டுமட்டே - பரிமுகத் தேரேறி வீரவா குலவுதிறல் பார்த்தவெய் யோன்விளித்துப், பாலன்முரு கனுமல்லே யொருவரினு மல்லேசிறு பையவென வெல்வ னென்று - நெரிபடைகள் விடவிட மறித்தும்பல் கணைதூவி நெறுநெறென விரதமுறிய, நிகரிலா வமரெதிர்த் தாடியுந் தொலேவிலா னெடுமாய பாசம் வீச - விரிகயக் கடலூடு கட்டுண்டு பூதர்முதல் வீரவா கயரவோர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 68

கடவுள நுணர்த்தவொரு தேர்மீதி லாரோ கணித்தமர்க் களங்கண்ணிநீ, காரவுண னீரா யிரங்கைகொடு பூதரைக் கடிதில்வயி றூடடக்க-நடலேயவு ணப்படையை வாளிதூஉ யட்டவ னவின்றசொற் கெதிர்புகன்று நடுவுட றுளைத்தவன் வலிதொலைத் துப்பூதர் நாடுவீ ரர்கள்வரவுமே - பட படத் தவனொர்தண் டேவவத் தம்பல பறித்தும்பி னெழவெறிந்து, பற்று போ தாயிரஞ் சிரம்வீசி யெழுகாற் பறித்தும்பின் வந்துபொரவே - விட மனைய வரிமுகன் படுமாறு குலிசம் விடுத்தடர்த் ததின்மகிழ்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 69

எல்லா மொழிந்துதுய ருற்றகா சிபர்புதல்வ ரேறண்ட மாயிரத் தெட், டினிலுலவு தானையவு ணர்கள்குழு மவுண்டுபூண் டிரதத்தெ திர்ந்து வரவே - மல்லார் புயப்பூதர் வீரரொடு வீரர்கோன் மலேவுற் றுடைந்திடப் போர், மண்டியட ரவுணரைத் தேரேறி வாளிதூஉய் வருமண்ட வழி யடைத்துச். சல்லாப மொடுசெகுத் திட்டுமுனை யசுரர்கோன் சற்றுமதி யாதுதன்னைத், தான்புகழ்ந் தேபொருது வீரர்முத லோடச் சயங்கண்டு முனையெதிர்த்து - வெல்லாது தேர்சிதைந் தாகாய முதலெங்கு மேவியமர் செயமலேந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ் குமரனே. 70

அண்டத்தி னப்புற மிருந்துவரு படையையு மடர்த்துமுன் னரன் மகத்தி, லருள்வேக விரதத்தி லேறுசூ ராழிமுத லளவில்படை விடமறித்

துக் - கொண்டவன் றுனிபடச் செய்தண்ட கோடிகள் குலாவியு மலேந்து மாயை, கூறுமமு தக்குன்றி ஞலிறந் தவரெழக் கொன்றுமிந் திரசாலமாக், கண்டகன் றேர்கொடனே வோரையு மயக்கக் கணைந்துகணை பலகொண்டு தூஉய்க், கலகலத் திடவடித் தேருசிங் கத்துயிர் கவர்ந்துநே மிப்புளாக-விண்டகைகொண் மயிலேறி யட்டுமெண் புனலங்கி வேற்றலம தாகவட்டாய் மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 71

மாலாக வஞ்சமெனுரு கூற்றெனவு மிருளெனவு மலேயெனவும் வளியெனவுநீள், வடிவுகுற ளெனவுமன லெனவும்விட மெனவுமோர் மகார்களிளை யோர்களெனவும் - மேலாகி யமர்செயக் கோடியா யிரம்வாளி விடுட்டடு மியாவுமான, மேனியெழில் காட்டநீ மதியொடுள முருகுது தி வேண்டுமச் சூரனேமுன் - போலாக வேயெதிர்த் தோடியார் கலியிடைப் புக்குமாமரமதாகப், புலவர்மலர் மழைபொழிய வவனுமயில் சேவலாய்ப் புறமணுகி வாழவெற்றி, வேலாயுதத்தாற் பிளந்தவைகள் பொரவுநீ மேற்கொண்டு நின்றருளினுய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே

ஆனசெயல் கேட்டசூர் மனைவியின் னுலகுறவு மவரவர்க் காங்கிரியைநன், காற்றவிர ணியனும் புகர்க்குரு விஞற்சிறை யகன்றுவரு சீர்ச்சயந்தன் - வானவர்க டொழுதிடப் பூதர்படை வீரர்விறல் வாகுசூழ் தரமுனிவருண், மகிழவிந் திரன்வாழ்வு நிலைபெறப் பல்லுலகு வாழ்த்தமீண் டமரர்போற்றுங்- கோநகர மாய்ச்செந்தி லோங்கவெண் கோழியொரு கொடிகலா பத்தமயின்மேற், கொள்ளும்வா கனமாக மூவா தியங்கவொலி கொள்ளவீ ராறுபுயமென்- மேனயங் கொண்டரு ளருட்கனே ராறுமுகமேவியரி யணையமர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 73

---

## தேவகாண்டம்.

புண்ணிய மெனும்பயிர்க் கவுணர்களை யறுமாறு புரியுத்தம யுத்தமெனவே, புவனமுற் றும்புகழ் பிரதாபநீ செந்திலிற் புக்கரித் தவிசின்மேவி, யெண்ணிலம ரர்கள்பூசை யன்றிறவு கொண்டிரவி யெய்திடச் சிவனையர்ச்சித், தெட்டிலார் திருப்பரங் குன்றினிற் புனைவர்கோ னெண்ணியமை தருமாலயம்-நண்ணியங் குறைபரா சரனுறு மைந்தர்க்கு ஞானபோ தகநல்கியே, நகைமதி முகத்தெய்வ யானையை யுனக்கிய நாடிவேண் டிஞ்முளத்தே-விண்ணிறை களிக்கமண நாளைபுரி குவமென்று மெய்ம்மொழியளித்திருந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 74

உம்பர்கோ னுனதுகல் யாணவைபவமான வுற்சவச் செய்தியெங்கு மொற்றரா லோதப் புரிந்துதெய் வப்புலவ ஞெளிவீசு நவமணிகளாற் - செம்பசும் பொன்னினுல் வதுவைமண் டபமன்று சிங்கார வனமுதலெலாஞ், செய்யநக ரெங்கணுங் குமுகுமென மலர்மாலை செஞ்சாந்து செறிய முசுவாய்-அம்பரன் பரைமீது வில்வமொன் றேயெறிந் தகிலமுழு தாளுமுசுகுந், தனுமன்னர் யாரும்வா முகமனிட் டிரவுபோ யாதவனே டமரர்முனிவோர் - வெம்பரங் குன்றுறத் தனையளணி பெறவந்து வேண்டவு மகிழ்ந்தெழுந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 75

இதமேவு பல்லிய முழங்கவைர் தருமலர்க ளெங்கும்விண் மூடவாண்பெண், எல்லாங் குதூகலங் கொண்டாட மங்கையர்க ளினியகானஞ்செய்தாடச், சதமகன் மான்முத லனைத்தின்பு தேக்கிடச் சசிபசும் பால்பால்கொண்டுபொற் றாள்விளக் கிடவதுவை மண்டபஞ் சார்ந்துமயி றனையொருவி யரியணையின்மேல், நிதமணக் கோலங்கொள் கோலாக லாவென்ன நீயமர்ந் தருளவங்கே, நித்தனுமை யோடுவந் தங்கைகொடு புல்லியுணிறைந்துவந் துச்சிமோப்ப, விதவிதப் பூவனத் தின்மடி யிருந்துசூர் விதியோத விதிமகிழுவாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 76

அம்மையப் பன்மகிழ விந்திரன் பெற்றபெண் ணமுதுபூங் கொம்பெனத்தா, ளணுகியவ ரைப்பணிந் தனதுபான் மண்டபத் தரியா தனத்திருப்ப-மும்மையுல குந்தாங்கு கைம்மலரி விந்திரன் முன்றேவி காகநீரால், முண்டகத் தாள்விளக் கிப்பூசை யாற்றியொண் முகமரன் மலர்க்கையேற்றி, யெம்மையாள் கோவுக்கு நல்கினே னல்கினே னென்றுநீர் வார்ப்பவாங்கி, யியமுழ முழங்கமங் கலநா ணணிந்துகுழ லெழில்பெற வனைந்துமகிழ்வால்-வெம்மையழல் வினையாதி மறைவிதியின் முற்றவருள் விளையன்னை யோடிருந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிருபாலமர வேதபுரி வாழ்குமரனே. 77

வாசம் பரங்குன்றி னிற்கொண் டெழுந்தருளி வானாட்டி னிற்புனைவர்கோன், வளமொடு புரிந்தநக ருற்றிருந்தி ரற்குமணி மகுட்முடி சூட்டிமிக்க - நேசமொ டிருந்துவெண் கயிலையை யடைந்தங்கு நின்றுநவ வீரர்முன்போ, னிற்கவொளிர் கந்தமா தனமீது தேவியொடு நிறையருள் புரிந்துறையுநீ - பாசமக லிந்திரனை யாசாற்கொ டயிராணி பாலிருத் தித்தேவரைப், பாதுகாக் குஞ்செயல் சயந்தனுக் கருளினுய் பகைவந்த வகைவினவவில் - வீசமுடி சூடினே ஞசானு னருள்வேண்டி விளைசெய லுணர்த்தமகிழ்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே.

## தக்ஷகாண்டம்.

தேவர்துதி மகபதி துறந்திடா தின்புறச் செய்தருளி யுண்மகிழ்ந்து,
செப்புமுன் னூளயன் புதல்வர்பதின் மருளறிவு செறிதக்க பூபதிக்குத்,
தாவின்மூ வரிலுயர்ந் தருள்பரம சிவமகிமை சாற்றியநு மானமாற்றித்,
தக்கவிடை தந்திடத் தக்கன்மா னதவாவி சார்ந்துசக சிரவருடமோர் -
பாவனை யுளத்தொடு தவஞ்செய்து சிவபிரான் பரையோடு விடைமேல்வரப்
பணிதுதி புரிந்துலக மெல்லாந்த ஞுணையுட் படியவும் பரையுமகளாய்,
மேவவும் பரமனே மருகனு வரவுமொரு மிகுவரம் பெற்றதோர்ந்தாய்,
மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 79

தன்றுறைத யருடக்க மாபுரியின் மறைவல்லி தன்னிடத் தாயிரஞ்
சேய், தந்தாயிரஞ்சேய் பினுந்தந்து தந்தைசெயல் சாரப் புரிந்தொர்முநியா,
லொன்றுத செயல்கண்டு தருமன்முதன் மாதவர்க ளுறவரிவை யிருபத்து
மூன், றுதவிமதி மணமேவ வரிவையிரு பத்தெழுவ ருதவியர சாற்றிமதியு,
ணன்றுக விருவரை நயப்பவவ ஞோமது நாடியொளி கலைகளெல்லாம்,
நாளுக்கு நாள்குறைந் திடுகவென் றவனொர்கலை நாதன்முடி யேறவச்சூள்,
வென்றுக வொருவாறு தக்கபூ பதிகண்டு விமலனை முனிந்ததோர்ந்தாய்,
மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 80

தக்கன்முனி வைப்புல்க முநிமாற்றி யுறவெமது சாம்பவி மகேசர்
மகிலைம, தான்வினவி யவர்சொலத் தேர்ந்துமே தோதனைத் தான்மதித் திட
முனிவுகொண் -டக்கருணை வடிவான பரனரி யயன்றேவ ரணுவகையு ளறி
வளிக்கு, மச்செயல் விடுத்திடச் சடமெலா மாகவுமை யஃதறிந்
தேத்தவெழுவார் - நக்கனரு ளாலுருத் திரரவர்க ளிடைமருது நாதனை
யருச்சிக்கவே, நண்ணுவார் யாவரும் பிழைதவிர்த் தாள்கென்ன நாயகி
யிடத்ததென்று - மிக்கவர்க் கருளியுமை தக்கன்மா மகளாக விடைபரமர்
செய்ததோர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி
வாழ்குமரனே.
81

தனியமுனை வனசமேற் சகமீன்ற சங்கரியோர் சங்கவடி வாய்க்
கிடந்து, தக்கன்மனை யொடுபோந்து மாசிமக நாடனிற் றண்புனல்
குடைந்துமீள்காற்- கனிவுட னெடுப்பமக வாகிமறை வல்லிகைக் கனியாய்
வளர்ந்துசேடிக், கணமொடைந் தாண்டின்மே லாறிரண் டாண்டளவு
கடவுளைக் கருதிநோற்றுப் பனிமதி முடிப்பானை மாறுக நோக்கிப் பழித்
துரையின் மகிழ்வளித்துப், பகர்வரிய மாதவத் தந்தைமறை வல்லிகை
படைத்ததவ மோடளிப்ப- மினியொளிர்செய் மணமண்ட பத்தினிற் பாமர்

பால் விபவமொ டிருந்ததோர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 82

சங்கரி வருந்தவொரு மாமனு மிகழ்ந்திடச் சம்புமறை வாகிமறை விற், ருக்கா யணிப்பெயர்கொ ளம்மையைக் கொண்டுபோய்த் தவளமலை மீதிருப்பப்- புங்கவர்க ளுரைகொண்டு தக்கனுங் கைலையிற் புக்கிட மிலாது மீண்டு, புத்தேளிர் காளின்று முதலாக வரனையோர் பொருளெனக் கொள்வதழகோ - உங்களுளமெனவென்ன வவரவ ரிசைந்தேக வுந்திபூத் தோன்பினெருகா, லொருமகஞ் செயவுன்னி யும்பர்மால் புதல்வர்வர வோதியொரு வாறுசூழ்ந்து - வெங்கணர வாபரணர் முன்போய்ப் புகன்று சிறு விதியுட னிகழ்த்த வுணர்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 83

அயன்மக முயன்றபோ தங்கமார் வரநந்தி யண்ணலொரு நூறு கோடி, யானசா ரதர்சூழ மாதேவன் விடையினு லவணுற வெகுண்டுதக்கன் நயவசன மின்றியரி யேபரம் பொருளவியை நல்குதந் தாயென்னவே, நந்தி யெண் ணரியசின மேவியா னில்லாது நண்ணுமக மாற்றுவோர்க்கும்- பய மிலா திகழ்செய்த தக்கனுக் குந்தலை படக்கடவ தங்கணுற்ற, பலவமரர் சூரனுன் மாறாத துன்பம் படக்கடவ ரென்றுசாபம் - வியனிலா யாகசா லைக்குளிட விதிவேள்வி விதிபோன விதமுமறிவாய், மேதகைய ரோது மிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 84

தந்தைமக மதுவாக மற்றுமொரு பகன்மகந் தக்கனுற் றிடமுயன்று, சாம்பசிவ னல்லாது மற்றையர் வரச்செய்து சாருந் ததீசிமுனிவர் - அந்தோவி தென்னபதி யுமையின்றி மகமாற்ற லழகோ வெனச்செயலிதா, மறிகவென் றியாவர்க்கு மீ ச ன ன் றேபரம னவமதித் தாயேயெனப் - புந்திகொள் ளாதென்பு புனையுமோ தலைமாலை பூணுமோ சாம்பர்மேனி, பூசுமோ கங்காள மேந்துமோ கேசமும் பொருபன்றி தருமருப்பும்-விந்தை யுள கமடவலி யோடுந் தரிக்குமோ விமலபர மெனவறிகுவாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 85

உயிர்களொழி தருசெயல் படைக்குமோ புலிதந்தி யுரிபூணு மோக ணிச்சி, யுழைசூல மேந்துமோ பலியேற்கு மோநட முஞற்றுமோ சாரத ரெலாம் - அயலுறத் திரியுமோ நச்சரவு வெண்டலையை யணியுமோ வேறு மேனி, யடையுமோ வன்மாட்டி லேறுமோ கொடுவிட மருந்துமோ யீம முறுமோ - மயிர்மீதி லொருபெண் சுமக்குமோ வதுவன்றி வாமத்தி லொருபெண்மேவ, வைக்குமோ பிள்ளையும் பெறுமோவெவ் வியகுணம்

மருவுமோ பரமனென்று-வெயில்வீசு முடிமேவு தக்கனிகழ் செய்திவைகள்
வினவுசெய லுந்தெரிந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேத
புரி வாழ்குமரனே
86

பிரமன்முத லோரைப் படைத்தழித் திடுதொறும் பிரியன்பு தலை
பூணுமே, பேருடலை நீறாக்கி யணியுமே யதுசான்று பின்னவர்க் குப்புவியை
யுண் - கரவனைப் பன்றியாய்க் கொன்றவன் கோடுமெய் கலந்திடச் சேர்த்
தாழியிற், கடைமந்த ரந்தாங்கு மாலாமை யோடுங் களித்துத் தரித்
தருளுமே - பாமுத்தி கருமமே யென்றதா ருகர்வலி பறிக்கமோ கினி
யாகியே, பச்சைமா லேகப் புரிந்துபலி யேற்றனையர் பன்னிய ரிடைப்ப
லுருவாய் - விரகர்போ னூற்பத்தெ ணாயிரம் புதல்வர்வர விரவினு தென்ற
துணர்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே.

அதுகண்ட மாதவர்கள் வேள்வியாற் கண்டபுலி யம்பரசு நவ்வி
யரவம், அடுபூதர் வெண்டலையொர் துடிமுயல கன்றனை யடக்கருதி யே
விடுப்பக் - கதுமெனப் புலியுரித் துரிதரித் துப்பூத கணமய லுறப்பணித்
துக், காலின்முய லகனையு மிதித்துமற் றவைமெய்க் கலந்தருளி யமர
ரேத்தப் - பொதுவினட மாடுமே வெங்கயா சுரனதுரி புகல்புக்க மாதவர்க்
காப், போர்த்தருளி யேயய னரிக்குளூறு மாசங்கை போக்கிவயி ரவனை
யாக்கி - விதியிகழ வவன்முடி யடர்த்துமால் வெருவும்வகை விட்டருளு
மென்றதறிவாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்
குமரனே.
88

இந்திர னகங்கைதகொள வேறுருக் கொடுபோ ரியற்றவற் குண்மை
காட்டி, யேத்தவிட் டவன்மீது கொண்டசின மேலாழி யிடவே சலந்தரப்
பேர் - மைந்தன்வந் தளவினு டன்புதந் தேகயிலை மருவவே றுருவினேகி,
வலிகாண்டு மென்றுமண் ணுழியொரு தாளால் வகுத்துக்கொடுத்தடர்த்து-
வந்தருளு மேயெலா மொழிநாட னிற்றரும மானதே விடைவடிவமா, வா
வேறி யாழியிற் கடைநாளி லாவுதரு வன்கடுவை யுண்டும்பர்தம்- வெந்துய
ரகற்றியே முடிவுநா ளீமரட மேவுமே யென்றதறிவாய், மேதகைய ரோது
மிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே.
89

அம்மையோர் பொழுதான் கண்மலர் புதைத்தங்கி யம்பகத் தாலெ
டுத்த,வத்தத்தின் வேர்வையே பத்தான கங்கையா யகிலமெல் லாம்பரவவே-
செம்மையுற வேணிமே லணிந்த் தயன்றெழில் சிதைத்துமா லொடுமு
னேத்தத், திருநீறு கண்டவரை யிடமே தரித்திடத் தேவிவந் திடவருளுமே
மும்மையுல குந்தொழ வாம்பெற்ற கயமுகன் முடிந்திடக் குடிலையும்பல்,

முன்னிலையி லேங்கரப் பிள்ளையைப் பெற்றருளி முடியமரர் துயர்நீக்கியவ்- வெம்மையான்முன்செய்வெந்தொழின்மகவு முன்செய விதித்தருளு மென்ற தறிவாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே.

சாத்திக மிராசத மிரண்டுமயன் மாலுடன் றந்தாக்கல் காக்கலீந்து, தாமதத் தாலழிவு செய்துயிர்க டடுமாறு தனியிலைப் பதுமாற்றமே - ஏத்து மறை குணரகித சிற்பரம் பொருள்விமல னெனுமே யறிந்தாயலை, யென்று பலகாதையா னன்குறத் தக்கற்கியம்பவுட்கொண்டானலன்காத்தரு டதீசி பதி யில்லாத மகமழிக் கணவமர ரொழிகமறையோர், கடவுளடி யார்சாத னுப்பத்தி யின்றிமெய் கடிந்தொழிக வென்றுதக்க - வேத்துவேள் விச்சாலை நீங்கவா டகமாடை வீசிவினை முயல்வதோர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே.
91

நாரத னறிந்துபரி பூரண னிடத்தோத நாயகி பான்செய் விடையால், நண்ணிவேள் விச்சாலை யங்கணுறு நிந்தையை நவின்றுபரா னேக்கில் வந்த - வீரபத் திரனையுந் தன்சின மெலாங்கூடி வெளிவந்த காளிதனையும், விரவப் புரிந்துறக் கடவுள்விடை யாலவி னுைப்பூத ருடனேயார - வார மிட் டமையாத தன்மையால் வேள்வியை வளைந்தமர ருள்ளமோர்ந்து, வன் மனத் தக்கன்மக முடியோ டழிக்கவரன் வரவையெதிர் நோக்கியங்கு, மேருவரை போன்முடிக ளாயிரங் கொண்டிலகு வீரநின் றதுமறிந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 92

தண்டா லடித்துமிகு தலையிற் புடைத்துமொரு தனதுளம் போற் பல்வகையாய்த், தண்டனை யியற்றியும் விண்டயன் விழச்செய்து தளரமரர் தமையடர்த்துக் - கண்டாங் குளங்கலங் கியதக்க னிகழ்முடி கடிந்தனலி விட்டுவீரக், கடவுணகை செயநின்ற காளிமா தேவியெதிர் கணமாதர் வகையடர்க்கக் - கொண்டாட்ட மிகுபூதர் புரிசைவ்வேள் விக்களங் குலையச் செய் திடமாயவன், கோபமொ டெதிர்த்திடப் பரமனருடேர்மிசைக் குலவு மருள் வீரவள்ளல் - விண்டா விராயிரங் கைகொண்ட தேவியொடு வெளி வந்து நின்றதுணர்வாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே.
93

அவ்வமய மாலெதிர்ந் தமராடு திறமியம் பரிததனை வீரன்மாற்றி, யருளாடல் புரிவது மியம்பரிது மாலேவு மாழியை யயின்றுசினவச்- செவ் வியவொர் வாக்காற் பான்றடுத் திடவரி தெரிந்தேத்தி யருளடைந்தான், தேவதே வன்பரா பரையோடு வந்தருட் டெரிசன மளித்துநோக்க் - கொவ்வைவா யுமைவேண்ட வீரனு லவாவர்கள் குதுகலங் கொண்டெழுந்

தார், குறைகடீர்ந் தயனுமகன் மறிமுகத் தோடெழக் கொண்டணைத் திவகைபூத்தான் - வெவ்விய வுளத்தவர்க் கபயமே தந்தறிவு விளையவருள் செய்ததோர்ந்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 94

தந்தைதன் றந்தையுந் தானுமொ ரகந்தையிற் றழலுருக் கொண்ட பெருமான், சரணமுடி தேடியருள் பெற்றகதை கூறித் தவஞ்செய்வகை யோதநோற்று- வந்துசிறு விதிகணப் படைமன்ன னாகியே வாழ்ந்திடக் கருணைசெய்தார், வள்ளலா ரீதுதான் மூலநீ யறிகவென மந்திரி சயந்த னோர்ந்தான்- கந்தவிர தஞ்சுங்க வாரமறு மீன்றுலாக் கதிர்மதித் திதியா றெனக், கண்டுநோற் றுப்புவி புரந்துவிட் பகைவென்று காசினியி லேழ் விடங்கர்- விந்தையொ டுறப்பூசை செய்துமுசு குந்தனும் வேந்துகதி பெற வருளினாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரிவாழ்குமரனே.

நற்கலைச் சிவமுனிவ ரானவ்வி யகடுற்று நறுவள்ளி யகழ்குழிப்பால், நணுகியொர் கிராதனில் வளர்ந்துமங் கைப்பருவ நகுவள்ளி தேவிதினை யாம் - பொற்புறு புனங்காக்க நின்வரையி னின்றுலகு புகழ்செறுத் தணி வரைப்பாற், போந்தொர்முனி யாலறிந் தொருவேட னாச்சென்று புதுவிரக தாபமோதி - யற்பளித் தவண்வேங்கை யெனமாறி வேடுவ ரகன்றபின் முன்போன்றுவந். தம்மையை வலிந்திரந் தவர்வாக் கிழவுறு வடைந்தவர்க் குரியபேசி - வெற்புறு சுனைப்பா லுளக்கருத் துறைதந்து வேழமுகன் வா வினைத்தாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே.

கூட்டுவிக் குந்திறத் தமையனு லங்கின்பு குறமாது தாமகிழ்ந்து. றுயிறந் துறுசேடி யாமெலார் தாமின்பிற் குளித்தெழுந் தில்லிலேக-வாட்ட முற் றவ்விலிற் சேடிகொடு பெற்றரிதின் மாதின்ப முண்டொர்பொழில் வாய், மன்னியய ரமர்செய்த வேடரைக் குக்குடம் வலிந்தொலிக் கத் தொலைத்துப் - பாட்டின்ப முநியாற் றிரும்பிமான் மகளுரை பலித்திட வெழுப்பியவர்முன், பாவவருள் செய்தவ ரிலஞ்செய்த தவமெனப் பரிவோ டெழுந்தருளினீ-மீட்டுமவர் மகிழமறை விதியாற் கரந்தொட்டு வியன்மணக் கோலமுற்றாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ் குமரனே. 97

அண்டர்கள் வியப்பவுமை யானருள் புரிந்தேக வன்பின்வே டுவ மாதர்வா. யாசில்வாழ்த் திடுவா ரிதழ்கழகு மலர்மாரி யதனுளருண் மாரி பெய்தாய் - தொண்டைநாட் டுத்தவ மெனத்தணிகை மலையிற் றுலங்கியா னுருவமைத்துத், துணைவியொடு கந்தவரை மீதெழுந் தருளிமகிழ் துன்னி

மகிழ் குஞ்சரிக்குப்-பண்டைநிகழ் வோதியவ் விருமாதர் பாலெனப் பைந்தே னெனக் கலந்து, பகர்கிரியை யிச்சையாஞ் சத்தியா யொளிதரப் பல் லுலக மேத்தமலரோன் - விண்டமரர் கொண்டாட வன்பருக் கின்பருளி விளையாடல் செய்தருளுவாய், மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ்குமரனே. 98

ஆறுமுக மேவியரு ளாறுதல முந்தெரிந் தாறெழுத் தெண்ணி யன்பி, னுறுநின் றேபொய்ப்ப வஞ்சவா தனைவெம்மை யாறுமெய் யறி வுளத்தோர் - கூறுநின் மான்மியச் செவியுணவின் வகையையக் கொள்கை யினர் பலர்பகர்ந்தார், குணமில்சிறி யேனுமுன் விரதமா மாறுன கோணுன் மதித்திதிதொறுந் - தேறும்வகை யுட்கொளத் துதியதாச் செய்துளேன் செப்பாறு பகுதியாகத், திருவுள முகந்தருள்செய் தையனு யகிவயித்திய நாதர் மகிழ்கண்மணியே - வீறுசங் கத்தமிழ் முதற்புலவ னேபுள் ளிருக்கு வேளூர்வள்ளலே, மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமா வேதபுரி வாழ் குமரனே. 99

தெய்வகுஞ் சரிவள்ளி தேவிமார் வாழிவெண் சேவற்ப தாகை யோடு, செங்கிரண வெற்றிவே லும்பச்சைமயிலுமெய்ச்செல்வவிளை யவரும் வாழி - கைவளர்மெய் யருள்வாழி கழன்மலர்க் கதிவாழி கண்களரு ணோக் கம்வாழி, கந்தமலேவாழிநீ யுகந்ததலம் வாழியுட் கருதா றெழுத்தும்வாழி, உய்வகைசெய் முருகநா மத்துட னெலாம்வாழி யோதுகௌமாரசமயம், உற்றமெய் யன்பரிச் சதகபா ராயண முகந்துமகிழ் வோர்கள்வாழி-மெய் வழியுளின்புதரு திருவுள்ளம் வாழியருள் விளையமுதனிவாழியே,மேதகைய ரோதுமிரு மாதரிரு பாலமர வேதபுரி வாழ்குமரனே. 100

வேலுமயிலுந் துணை.

க ந் த பு ரா ண ச த க ம்

முற்றுப் பெற்றது.

---

௨

கடவுள் துணை.

## நந்தியெம்பெருமான் சிவபிரானிடத்து வேண்டிய பதினாறுபேறு.

மறைகள் நிந்தனை சைவ நிந்தனை பொருமனமுந்
தறுகண் ஐம்புலன் களுக்கேவல் செய்குருச் சதுரும்
பிறவி தீதெனுப் பேதையர் தம்மொடு பிணக்கும்
உறுதி நல்லறம் செய்பவர் தங்களோ டுறவும்.

யாது நல்லன்பர் கேட்பினும் உதவுறு மியல்பும்
மாத வத்தினோர் ஒறுப்பினும் வணங்கிடு மகிழ்வும்
ஓது நல்லுப தேசமெய் யுறுதியு மன்பர்
தீது செய்யினுஞ் சிவச்செய லெனக்கொளுந் தெளிவும்.

மனமும் வாக்கும் நல்லன்பர்பா லொருப்படுஞ் செயலும்
கனவி லு முனதன் பருக் கடிமையாங் கருத்தும்
நினைவில் வேறொரு கடவுளை வழிபடாதநன் னிலையும்
புனித நின்புகழ் நாடொரு முறைத்திடும் பொலிவும்.

தீமையாம் புறச் சமயங்க ளொழித்திடுந் திறலும்
வாய்மை யாகவே பிறர்பொருள் விழைவுறா வளனும்
ஏமுறும் பரதார நச்சிடாத நன் னோன்பும்
தூய்மை நெஞ்சினன் யானென தெனக்கொளுந் துறவும்.

துறக்கமீ துறையினும் நரகிற் றேயினும்
இறக்கினும் பிறக்கினு மின்பந் துய்க்கினு
பிறைக்கொழுந் தணிசடைப் பெருமயிவ்வாம்
மறுத்திடா தெனக்குநீ வழங்கல் வேண்டுமால்.

---

௨

## சிறப்புப்பாயிரம்.

கும்பகோணம் நேட்டிவ் ஹைஸ்கூல் தமிழ்ப் போதகாகிய
குடவாயில் வித்துவான்
ஸ்ரீமத் கம்பராமாயணப் பிரசங்கி மகா-ள-ள-ஸ்ரீ
**ஐ. சண்முகம்பிள்ளையவர்கள்.**
இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பூமேவு சோணாட்டுத் திருமுல்லை வாயிலெனும் புரத்தில் வந்தோன்
மாமேவு புகழையா சாமியண்ணல் செய்தவத்தில் வந்த வள்ளல்
தாமேவு குணசிவசுப் பிரமணிய வேணயந்து தொடர்ந்து கேட்பப்
பாமேவு கந்தபுரா ணச்சுருக்கச் சுருக்கமெனப் பதிகம் போல.

சரிதமெலா மாடிநிழல் போற்றேன்ற வுயர்சதகத் தகுபே ரோர்நூல்[பா
அரிதரிதென் றுயர்கவிஞர் நனிவியப்ப வியற்றியச்சி லமைத்தா னென்
பெரிதுவக்கு நண்புடையான் கௌரிமா யூரநகர் பிறங்க வாழ்வோன்
விரிதமிழ்ப்பேர் மாரிபொழி சந்திரசே கரநாம மேலோ னம்மா. 2

இந்நூல் ஸ்கந்தசஷ்டி முதலிய விரதம் அநுஷ்டிப்பவர்கள்
பாராயணம் செய்ய மிகவும் உபயோகமுள்ளது.

# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 3 | 6 | 1 | சுல்யா சந்தரி | கல்யா சுந்தரி |
| ௸ | 7 | 7 | தவள்வைப்ப | தவண்வைப்ப |
| 12 | 40 | 3 | ஆபுயத் | ஆயுத |
| ௸ | 41 | 3 | துன்றறவுந் | துன்றவுந் |
| ௸ | 43 | 1 | தாலரசன் | தாலரன் |
| 13 | 45 | 5 | ணரக்கு | ணர்க்கு |
| 14 | 48 | 6 | வெகுன் | வெகுள் |
| ௸ | 49 | 2 | னென்வீரர் | னெண்வீரர் |
| 15 | 51 | 6 | வேருண் | வெகுண் |
| ௸ | 52 | 1 | ணமர்த்தி | ளமர்த்தி |
| ௸ | ௸ | 1 | லாதன் | லாதவன் |
| ௸ | 53 | 1 | தேர்புரி | தேர்பரி |
| ௸ | ௸ | 2 | வெருண்டு | வெகுண்டு |
| ௸ | ௸ | 3 | தெகேறறியங்கி | தேரேறியங்கி |
| ௸ | 54 | 2 | விளக்கருட் | விலக்கருட் |
| ௸ | ௸ | 5 | வாளாண் | வாளான் |
| ௸ | 55 | 3 | பகழுதூஉய் | பகழிதூஉய் |
| 16 | ௸ | 7 | சூரனில் | சூரனிவ் |
| ௸ | 56 | 5 | கழுங்கவம | கலங்கவம |
| ௸ | 57 | 4 | மதியமாக் | மதியமர்க் |
| ௸ | 58 | 6 | யன்ருன்ற | யன்ஞன்ற |
| ௸ | ௸ | 6 | னகாளித | னகாழித் |
| 17 | 62 | 6 | வீரரெழுவார் | வீரரெழுவர் |
| 19 | 70 | 2 | டிரகத்தெ | டிரதத்தெ |
| 20 | 72 | 3 | விடட்டடு | விட்டு |
| 21 | 76 | 3 | ஹுளத்தின்பு | ஹுளத்தின்பு |
| ௸ | ௸ | 5 | நிதமனக் | நிதமணக் |
| ௸ | 77 | 4 | முகமான் | முகமன் |
| ௸ | ௸ | 6 | யியமுக | யியமிக |
| ௸ | 78 | 2 | ருற்றிருந்தி | ருற்றிந்தி |
| 22 | 81 | 1 | வைப்புலக | வைப்புகல |
| ௸ | ௸ | 2 | தேர்ங்மே | தேர்ங்குமே |